[28th August 1961

**Sri S. M. ANNAMALAI :** கனம் அமைச்சர் அவர்கள் விவசாயத்திற்குத் தாரப்படுகிற அதே சார்ஜை வசூல் செய்ய வேண்டுமென்பதாகச் சொன்னார். அந்த விவசாயிகள் ஒரு லைட்டுக்கு மேல் இன்னொரு லைட் வேண்டுமென்று சொன்னால் அதைப் போட்டுகொள்வதற்கு ஆட்சேபனை செய்கிறார்கள். ஏழு நையா பைசா வசூல் செய்துகொள்ளட்டும், ஆனால் மூன்று நான்கு லைட் போட்டுக்கொள்ள அனுமதிப்பார்களா ?

**The Hon. Sri V. RAMAIAH :** அனுமதிக்கப்படுவதில்லை.

**Sri M. KALYANASUNDARAM :** பிரச்சனை இதுதான். சார்ஜைக் குறைக்க வேண்டுமா, வேண்டாமா என்பது அல்ல. அக்ரிகல்சரல் டாரிப்தான் இருக்கவேண்டும். அப்படி வசூல் பண்ணுவதே சரி. ஆனால் 40 வாட்சுக்கும் அதிகமாக லைட் வேண்டியிருப்பதனால் இதை அதிகரிக்க ஒன்றிரண்டு விளக்குகள் கூடப் போட்டுக்கொள்ள நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**The Hon. Sri V. RAMAIAH :** இதுவரைக்கும் இதுபோன்ற ஒரு பிரச்சனை கவனிக்கப்படவில்லை. இப்போது கொடுப்பதை அதிகமாகக் கொடுப்பது மின்சார போர்டுதான் கவனிக்க வேண்டும். இப்போது இருக்கும் நிலைமையில் அது சரியாக இருக்காது என்று நினைக்கிறேன்.

**Sri V. SUBBIAH :** இரவு நேரங்களில் விவசாயக் களத்தில் 100 வாட் பல்பு போட்டுக்கொடுத்து அதற்காவது குறைந்தபட்ச பணம் வசூலிக்கப்படுமா ?

**The Hon. Sri V. RAMAIAH :** அப்படி ஒன்றும் யோசனை இல்லை.

*Co-operative Motor Transport Societies*

* 1384 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா.—

(அ) தொழிலாளர் கூட்டுறவு சங்கங்கள் பஸ்களை நடத்த அனுமதிக்கப்படுகின்றனவா?

(இ) ஆமென்றால், நம் ராஜ்யத்தில் எங்கெங்கே அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri V. RAMAIAH : (*a*) Yes, Sir.

(*b*) Permits to run transport services were granted to Co-operative Motor Transport Societies in the districts of North Arcot, Tiruchirappalli and Tirunelveli.

*Headmasters (Pension)*

DEPUTY SPEAKER : As the hon. Member, who gave notice of question No. 1401 is not in his seat, the question and answer will be printed in the proceedings.